

உ

# திருநெல்வேலி

## திருப்பணி ஆறுமுகநயினார்

அலங்கார சட்கமும், திருப்புகழ்ப்பதிகமும்.

சைவ சபையார்

பாளையங்கோட்டை.

1932.

உ

முருகக்கடவுடுணை.

திருநெல்வேலி

திருப்பணி ஆறுமுகநயினர்

# அலங்கார சட்கம், வண்ணப்பதிகம்.

இவை

மஹான் வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள் முருகதாசசுவாமிகள்

எனவழங்கும்

ஸ்ரீலஸ்ரீ தண்டபாணிசுவாமிகளால்

இயற்றியருளப்பட்டு

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம் ஷடி சுவாமிகள் குமாரர்

தி. மு. செந்திநாயகம்பிள்ளையவர்களநுமதியின்படி

திருநெல்வேலி, தேவஸ்தான சுப்பிரண்டு

ஸ்ரீமான் A. முத்தையபிள்ளை B A., B.L. அவர்களால்

பாளையங்கோட்டை

சைவசபையாரைக்கொண்டு பதிப்பிக்கப்பட்டன.

ஆங்கிரஸவூ கடகாவி.

பெத்தாச்சி பிரஸ், பாளையங்கோட்டை.

1932.



குருவேதுணை.

# உபோற்காதம்.

## வெண்பா

அருண்மலயக் கால்வர் தசைதருபைஞ் சோலைத்
திருமலிநெல் வேலிநகர்ச் செவ்வேள் – பொருவி
லலங்கார சட்கமும்வண் ணப்பதிகந் தானுந்
நலங்கார்வ கல்குதன்மெய்ச் சொல்

## வசனம்.

சண்முகன்பத்தியுந் தமிழ்விற்பத்தியுந், தண்முகக்கருணைத்தன்மையும் பெருக்கிப், பொண்முகாடிப் பெரிதருகாமல் வண்முகத்தவஞ்செய் கௌமாரர்தந்தேவாம், திருநெல்வேலி, ஆறுமுகநயினார் அலங்காரசட்கமும், வண்ணப்பதிகமுமாகிய இரண்டு பிரபந்தங்கள் இப்புத்தகத்தில் ஒருங்கே திரட்டியச்சிடப்பட்டுள்ளன.

இவ்விரண்டும், திருப்புகழ்ச்சுவாமிகளென்றும், முருகதாசசுவாமிகளென்றும், வழங்கும்–மஹான் வண்ணச்சரபம் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணிசுவாமிகளால் (இன்றைக்கு ஐம்பத்திரண்டு வருடங்கட்கு முன்பு) தெய்வீகக் காரணமாகத் திருவாய்மலர்ந்தருளப்பெற்றன

திருநெல்வேலித்தலத்தில் விளங்கும், ஸ்ரீ அனவரததானநாதர் திருவாலயத்தின் மேலையாவரணத்தில், தெக்ஷிணாபிமுகமாய், ஆறுதிருமுகங்களுடன், பன்னிருதிருக்கரத்தலங்க, ஞானசத்திவேல் தரித்து மயூரவாகனரூடராய், ஸ்ரீவல்லீ தேவசேனாசமேதராய், எழுந்தருளியிருக்கும் ஆறுமுகநயினருக்குச் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அலங்காரசட்கமென்னும் அரியநூலானது, வெண்பா, கலித்துறை, கலிநிலைத்துறை, எழுசீர்விருத்தம், இரட்டையாசிரியவிருத்தம், சந்தம் என்ற ஆறுவிதயாப்பில் ஒரடுக்குவீதம், ஆறடுக்கு சேர்த்தெடுத்து, நூலாரம்பமுதல் ஈறுகாறும் அந்தாதித்தொடராய் முடிக்கப்பட்டிருத்தலின், அப்பெயர் பெற்றது.

ஐந்துகவிகொண்டது பஞ்சகம், பலபஞ்சகஞ்சேர்ந்தது, அலங்காரபஞ்சகம் என்றாயதுபோல், ஆறுகவிசேர்ந்தது சட்கம். அவ்வாறு சட்கம் ஆறுசேர்ந்தது அலங்காரசட்கமென்றாயிற்று. இந்த நூலானது அன்புடன் கற்றுப்பயிலும் புலமை மாணவர்க்கு, இன்பப்பெருக்கையும், பாராயணமாகக்கொண்டு துதிப்போர்க்குச் சர்வாபீஷ்டங்களையும், அடையக் கொடுக்குமென்பதுண்மை.

வன்னப்பதிகமானது, வண்ணயாப்பில் எட்டுக்கலைகொண்ட கவி பன்னிரண்டும், முருகக்கடவுளது, துவாதசபுயங்களிலுஞ் சாத்துந்தோள ணிகளை யொத்தனவாய், "விருப்புடன்றுதிக்கும் வித்தகத்தொண்டர் பொருப்புறழ்வினையெலாம் பொடிபடநூறிச், செல்வமுங்கல்வியுஞ் சிறக் கவளித்துப், பல்வகைச்சித்தியும் பத்தியுஞானமு, முதவிப் பிறப்பிறப் புற்றுழலாமெய்ப், பதமெனுமுத்திப் பயனுறவிடுக்கும்" என்பது சத் தியம்.

மேற்கண்ட இரண்டுநூல்களையும் ஒருங்குதிரட்டிப் புத்தகரூபமாயச் சிட்டுத்தமிழுலகத்துக்குதவிய. பாளையங்கோட்டைச் சைவசபை அங்கத் தினராகிய அன்பர்கள் பலருக்கும், அவருள் ஒருவரும், சாலிவாடீஸ்வரர் தேவஸ்தானம் சூப்ரண்டுமாகி, இத்தகையதருமங்களை இயக்குவிக்கும், ஸ்ரீமான் முத்தையபிள்ளையவர்கட்கும், தமிழுலகம், என்றுமாறாநன்றி பாராட்டுவதாக:- குமாரபக்தியுள்ள தமிழறிஞரனைவரும் இதனை அன் புடன் அநுசரித்து இன்புறுவாரென நம்பி, அறுமுகக்கடவுள் திருவரு ளைப்பிரார்த்திக்கிறோம்.

இத்தகைய நூல்களையியற்றியருளிய ஆசிரியசுவாமிகள், திருநெல் வேலித்தலத்திற் சுத்தசைவ வேளாளர் மரபில், செந்திநாயகம்பிள்ளை, யென்பவரது தவப்புதல்வராய், ஆயிரத்துப்பதினேந்தாம் ஆண்டாகிய, விகாரி வருடத்தில் அவதரித்து, இளமைப்பருவத்திலே முருகனுபாசனை வழி, சமரசஞானநுபூதியடைந்து, பலதலங்கட்குஞ்சென்று, சண்மதசம யாதீதபரமாகிய நூல்கள் பல அருளிச்செய்து, நடுநாட்டுத் திருவாமாத் தூர்ச் சிவதலத்தில் அடியவர்விருப்பப்படி கௌமாரமடாலயம் அமைத்து எழுந்தருளியிருந்து, கலி ஐயாயிரமாகிய விளம்பிவருடத்தில், திருவருள் விளக்க ஞானசமாதியடைந்து விளங்குகின்றனர்.

இவரால் இத்தத் திருநெல்வேலிக்குச் செய்யப்பெற்றுள்ள பிரபந்தங் களின் அட்டவணை, இதன்பின் அச்சிட்டுச்சேர்க்கப்பட்டுள்ளது.

சுபம்

இங்ஙனம்.

ஆங்கிரஸ ஞு கடகரவி }

இந்நூலாசிரிய சுவாமிகளின் சகோதரராகிய சித்திரபுத்திரபிள்ளையவர்கள் குமாரர்
சி. செந்திநாயகம்பிள்ளை,
காசுக்கடை, திருநெல்வேலி.

தெய்வமேதுணை.

உ

குருவே துணை

# ஸ்ரீ தண்டபாணி சுவாமிகளால்

திருநெல்வேலிக்குச் செய்யப்பெற்றுள்ள

## பிரபந்த அட்டவணை



### காணபத்தியம்

| | |
|---|---|
| கணபதி பதிகம் 2-க்கு | 24 |
| அனவரததான விநாயகர் பதிகம் 3-க்கு | 36 |
| ஷை வெண்பா | 2 |
| சந்திவிநாயகர் பதிகம் 1-க்கு | 12 |



### சைவம்

| | |
|---|---|
| கலம்பகம் கவி | 104 |
| பதிகமண்டலம் பதிகம் 45-க்கு கவி | 454 |
| திருப்புகழ் | 27 |
| வகுப்பு | 7 |
| பதிகம் 6-க்கு | 72 |
| யமகவந்தாதி | 102 |
| இதழகலந்தாதி | 33 |
| தில்லைபாதி நெல்லைபாதி வெண்பா | 53 |
| மணக்கோலமுடையார் பதிகம் 1-க்கு | 12 |
| பஞ்சரத்தினமாலை | 53 |
| தொண்டர்நயினார் பதிகம் 3-க்கு | 35 |



### சாத்தேயம்

| | |
|---|---|
| காந்திமதியம்மன் பதிகம் 3க்கு | 36 |
| சத்தி விஜயம் பருவம் 12–க்கு கவி | 148 |

---

கௌமாரம்



---

வைணவம்



——:O:——

உ

குருவேதுணை.

# பதிப்புப்பாயிரம்.

திருவாமாத்தூர்க்கௌமார மடாலயம்
இந்நூலாசிரிய சுவாமிகளின், மாணாக்கரும், குமாரருமான
கீ. மு. செந்தினாயகம்பிள்ளையவர்களால்
இயற்றப்பெற்றது.

—::—

## அறுசீர் விருத்தங்கள்.

அருள்வளஞ்சேர் பொதியையில்வா ழகத்தியன்கைக் கமண்டலநீ ராவிதன்னாற், பொருள்வளஞ்சேர் பலநலமும் பாண்டிநாட் டினுக்குத வும்பொருனைச்சார்பாய்த்—தெருள்வளஞ்சேர் காழிமறை யவன்முத லோர் பாவுசெல்வத் திருநெல்வேலி, மருள்வளஞ்சே ராதுகதி வழி யடையச் செயுந்தவத்தால் வந்தமேலோன். 1

தண்டபா ணியனருமைத் திருப்புகழோ னெழின்முருக தாச னென்ன, விண்டபெயர் மூன்றுடன்பல் பெயருடையோன் பரிதிசிவன் விமலமாயோன்—கொண்டன்மதக் கணபதிவே லவன்பொதுவா மெனு மெழுங் குலவப்பற்பல்—வண்டமிழ்நூ லினந்திருவாய் மலர்ந்தமுழு நீறு தண்டு வயங்கப்பூண்டு. 2

கோவணம்வெண் கீளொடுகல் லாடைசிகை பாதுகைகைக் குறியுங் காட்டிச், சிவகுருலையிற்சிறந்து சமரசநிச் சயஞானச் சிறப்புமேவி, மூவ லிலத் தவிதகவு மாரநெறி யன்பர்கொள மொழிந்துதேற்றிக், காவலர் வாழ் வையுமதியா தருட்பயனே யுயர்வெனக்கொள் கருணைவள்ளல். 3

நெல்லைநகர்ச் சண்முகவேண் மீதுரிமைத் தன்மைகொடு நிகழ்த் தலாய, வெல்லையில்சீ ரலங்கார சட்கமெனுங் கவியாறு நிசைந்தநூலும்—வில்லைநிகர் நுதற்கலையின் மகிழ்சந்தப் பதிகமொன்றும் விளக்கவச்சிட், டொல்லையன்பர் கொளப்பாப்பிப் பெருங்கருணைக் குகனருள்வாழ் வுற்றார்மன்றே. 4

அத்தகைவாழ் வுற்றிடுபா ளையங்கோட்டைச் சைவசபை யன்ப ராணோர். சித்தர்புகழ் சாலிவா டீசர்திரு வாலயச்சீர் செலுத்துஞ்சீல—முத்தையப்பே ரினன்முதலோர் செய்திடுமிவ் வறத்தினுக்கு முந்நீர்சூழு' மித்தரையின் றமிழ்ப்புலவர் செய்திடுகைம் மாறுபடித் தேத்த லொன்றே. 5

சந்தப்பா.

தனந்தான தத்ததன் னத்தனன தனதான

தலங்கார னத்திலென் னுற்றசம—யமதாறே
சொலுஞ்சீர்மு கத்திலன் னுற்றசிவ—குகன்மீதே
கலங்காம னத்தின்வண் ணச்சரப—குருமேனாள்
கவின்றேய்த மிழ்ச்சொல்வண் மைத்தெளிவொ—டிசைசேர்கால்
அலங்கார சட்கம்வண் ணப்பதிக—மெனுமீர்நா
லறகைாத வித்துமன் னச்சில்வெளி—யிடலாலே
விலங்காவு யர்ச்சிகம் முத்தயம—டிபனோடே
வியன்சேர்சை வத்தினுண் மைச்சபையு மிகவாழீ 6

தெய்வமேதுணை.

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம் இந்நூலாசிரியர் பௌத்திரர்
ஸ்ரீ. செ. முருகதாசப்பிள்ளையியற்றியது.

—0—

எழுசீர் விருத்தங்கள்.

சீர்மலிந்திலகு பாண்டிநாட்டிடையே திகழ்திருநெல்லைமாநகரிற் கார்மலிந்திலகுஞ் சுரிகுழல்வடிவாள் கவின்றரத்தினந்தொறும்வைகு மேர்மலிந்திலகு மாலயத்திடையே யிமையவர்புலவர்மன்னவர்க ளூர் மலிந்திலகு தொண்டர்கள்போற்ற நயந்துவேற்குருபரனமர்வான். 1

அத்தகையாறு முகப்பிரான்புயமீ தவிரலங்காரசட்கமுதல் வித்தகர் புகழ்வண் ணப்பதிகமுமுன் விளம்பினன்முருகதாசனெனப், பத்தர்கள் பரவுந் தண்டபாணியெனப் பழுதிலாத்திருப்புகழ்முனியென், றித்தரை முழுது மோதிடமுப்பே ரிசைந்திடுசெந்தவாய்ச்சரபன். 2

திருமலைமிசைநின் றருண்டதாலூனஞ் சிறிதுமில்லாதெழுந்திற லோன், கருமலையனைய மாயனுதியர்க்குக் கவிகளாயிரத்தொகை புகன் றோன், பொருமலைக்கடலில் வாவியிற்றீயிற் புனைகவித்திரள்கிழித் தெறிந்தோன், குருமலைமுதலாந் தலந்தொறுந்தொண்டர் குழாத்துடன் பெரிதுசஞ்சரித்தோன். 3

குருவலால்வேறு பொருளிலாஞாயக் கொள்கைதேர்ந்திலகு கௌமார, மிருநிலமுழுதுந் திகழ்வுறப்பசுக்க ளின்னன்முற்றொழிவுற மனித, ரருவருப்புறமூ னருந்திடாதமைய வருந்தவம்புரிந்தெழின் மாதைத், திருநகரிடைஞா னச்சமாதியினிற் றிகழவற்பணிவதெஞ் சிரமே. 4

அந்தநாலிரண்டு நெல்லைவாழீச ராலயம்புரந்திடுமேன்மை, சொந்த மாப்பெற்று முத்தயப்பெயர்தோய் தூயவன்பாளையக்கோட்டைச், சந்த மார்சைவ சபையினர்தம்மாற் றக்கவர்கொளப்பதிப்பித்துத், தந்தனன் கற்றோர் கேட்டவர்யாருஞ் சகலநன்மையுந்தழைத்திடவே. 5

முற்றிற்று.

குருபாதமே கதி.

உ

முருகக்கடவுடிணை.

# அலங்காரசட்கம்.

காப்பு.

கலங்காதார் வாழுநெல்லைக் கந்தவேட் கான
வலங்கார சட்கமளித் தானு—நிலங்காலாற்
றேர்தனி வாரணப்புட் கேதனமுங் கேகயமு
மூறுதவிர் கொற்றவை வேலும்

நூல்

வெண்பா.

திருமருவு நெல்வேலிச் செவ்வேள் சிவனுக்
கருமகவோ முன்னின் றருளுங்—குருமணியோ
வென்றுமனம் வாடா திரண்டேந்தா னென்றுரைப்பார்க்
கொன்றுங் குறைவுவா து. 1

கட்டளைக்கலித்துறை

வார்தழைக் சந்திரு நெல்வேலிவாழ்வுற வந்தகந்தன்
புறந்தான்றன்னை மயிலாக்கியூர்ந்த புதுமைகண்டும்
பரந்தமுந்நீர்நடு வீரமயேந்திரப் பட்டினத்தோன்
கார்தந்தருப மெடுத்தானென்றுலது காரணமே. 2

கலிநிலைத்துறை

காரானைமுகமுற்ற கணநாதனுடன்வந்து கதிர்வேலதாற்
போராடி முதுசூரன் முதலோர்களறவென்ற புகழாளனே
சீராருநெல்வேலி நகருறு சிலர்நிந்தை செப்பாமலின்
றீராறு புயமோடு மயிலேறி வரவேணு மெனையாளவே 3

எழுசீர் விருத்தம்

ஆளிகட்டியதேர் மிசைவருந்தகுவ ரனைவருமழிவுறப் புரிந்தாய்
தேளினுங் கொடிய சிலர்குடிகெடுக்குந் திறலுனக்கில்லையோ செப்பாய்
கோளிலாவளஞ்சேர் நெல்லையூர்க்குமர குருபரக்கொண்டலே குளிர்பூந்
தாளிடத்தெனது தமிழெலாம் புனைவாய் சரவணச்சண்முகக் குருந்தே 4

## இரட்டையாசிரிய விருத்தம்

குருபாதமேதஞ்ச மென்று மெஞ்ஞானநெறி
    கொள்ளாத மூடருக்கும்
கோதையர்கள் குற்றேவல் செய்துமதி யருளின்ற
    கொடியமா பாதகர்க்கும்
வெருளாம லுயிர்வதைசெய் தனுதினமு நீசர்க்கும்
    வெற்றுயர் பொருத்திமற்றை
மேலவர்க்கானந்தம் விளைவிக்குமொரு தெய்வ
    மேதினியிலில்லை கொல்லோ
தருநீழலிற்புலவர் தம்மைப் புரந்தவுணர்
    தங்குலமழித்த வீரா
சங்கரனுடன் சொன்ன பிரணவப்பொருளையே
    தமிழ்முனிக் குதவுஞானா
மருவார்மலர்ப் பொழிற் றிருநெல்லையூர் மகிழ
    வருபவனி யுடையமுருகா
மயில் வாகனத்திலிரு மடவார்கள் பக்கமுற
    வடிவேல் பிடித்த குகனே. 5

## சந்தக் கவி

(தானனத்தன தானனா)

வேல்பிடித்தகும ரேசனைச்சகல வீரருக்குமர சாளியே
    மேலவர்க்கிறைவ னைமுகத்தையனை மேருவிற்பரமர் பாலனை
    மீளியைத்தருவர் காலனைத்திருநெல் வேலியிற்புலவர் கோவைநால்
    வேதவிற்பனன்மு னோர்மலைக்குகையின் மேவிடச்சிறைசெய்தானை
[நீள்

கோல்பிடித்துமுதி யோனெனக்குறவர் கோதையைப்புகழும் வேளைநால்
    கோடிகற்றகுரு மாமுனிக்கருள்செய் கோனைக்குகனை வேலைநீர்
    கோவெனக்கதற மாமரத்திலுடல் கூறெழப்பொருத வாகைசேர்
    கூதளப்புயவி சாகனைத்தொழுது கூவுமெய்த்தவமு ளார்களே

கால்பிடித்தவழி பாடியற்றுமவர் காதன்முற்றுமத மோதுவார்
    காமனுக்குமய னையளித்தபழி காரிகட்குருகி வாடிடார்
    காரணப்பரசொ ரூபநிச்சயம காதத்துவமு மாகுவார்
    காகமொத்தரவு கூடேர்கவிஞர் காதையைப்பெரிது கூறுவார்

மால்பிடித்தசுட ராழியைக்சவரும் வரளாக்கனனை யாரெலா
மாயெ ட்டிமக வானெயொப்பவரை வாழவைக்குமதி யாலசயார்
மாமதிக்குமன ராணுறத்திகழும் வரய்மையுற்றமுழு நீறுளார்
வானவர்க்குமரி தாயசித்திகொடு மாயையற்றகதி சேர்வரே. 6

வெண்பா

சேரலர்கண் டேசச் சிறியேனைத் தியனைய
பாரமிடி வந்து படுத்ததே—நீரவருட்
செய்யாயோ செல்லைநகர்ச் சித்தாகுள் செவ்வேளா
மையா வடிவேல வா. 7

கட்டளைக்கலித்துறை

வேலாயுதத்தெய்வ மேநெல்லையூர்த்தொண்டர் மெச்சுமொப்பில்
கோலாகலக்குக னேயென்று நாடொறுங் கூவுமென்னைப்
பாலாழிமாலென்ன வாழவையாமற் பலர்பொருட்டு
மாலாயிரக்கவிட் டாலுனக்கேயந்த வைபவமே. 8

கலிநிலைத்துறை

வைதாலு மகிழ்கூர்வை யென்றுன்னை யறிதொண்டன் வாய்சொன்ன
மெய்தானெனிற்சற்று மெனையிக்குமனநோயு விடலாகுமோ [நான்
மைதாவவளர்வேணு வனநாதருயிர்போலும் வடிவாயிதன்
கைதான்மலர்த்தொட்டி லெனநாளு மமர்கின்ற கந்தப்பனே 9

எழுசீர் விருத்தம்

கந்தநாயகனே யடியவர்விருப்பங் கண்கொண்டருள்செயுங் கருணைச்
சுந்தரமுருகக் கடவுளேகடம்பு துதைத்தசோட்குமானே யென்று
சந்ததம்பரவு தமியனேற்கிரங்குந் ததியிதென்றறிகிலாய் ெ ரலலோ
செந்தமிழ்த்திருநெல்வேலியூர்ப்பரமன் செயுந்தவப்பயனதாஞ்சேயே 10

இரட்டையாசிரிய விருத்தம்

சேயமுக மாறுடைய முருகோனையன்றியொரு
தெய்வமுண் டென்று தமியேன்
சிந்தித்தருந்தமிழ் துதிபாடநாடினுஞ்
செஙகை மலரொழுதினுலும்

வாயவன்பெயரன்றி மற்றொன்றையுரையாத
மன்னுபேரறிவு மந்த
வண்ணமேயொளிருமவ னன்றியொன்றில்லாத
வண்மையுணர் வற்றதனிவார்
நாயமறை நாலுமொழி யுஞ்சமயமாறுமென்
சொந்தமெனவுஞ் சொல்லுவேன்
சொன்றனு செல்லோக நாரியதலந்தொறுந்
தோயுமெய்த் தொண்டரெல்லா
ரியவிர்குமாகுரு பரனடிமைதானெனா
நிகழ்த்துகின் றார்களிக்க
நிச்சயமறிந்துமவ னென்கவலைநீமுன்
னில்லாதிருக்கை யென்னே 11

சரசுவதி.

(தனத்ததனதன தனதானா)

இருக்குமுதலெண ணிகழ்ந்தசதுமறை யிடத்துநவல்பொரு ளறியேனே
விளிக்கமொழிகொடு பசப்புமடமக ளினர்க்குளுருகிட லொழியேனே
யெமக்குநிகரில யெனச்சொல்பவர்களை யெதிர்த்துவெலும் வலிபுனை
[யேனே
யிருட்டுநெறியிது வெளிசநிலையிது வெனப்பல்கவிமழை பொழியே
னே

நருக்களொடுமுனி வினைத்தைநிகர்சொடை தரித்தசிலமென மிளிரேனே
சமட்டியருளொடு வியட்டியருள்புனை தலத்திலதுதின முயலேனே
தரிக்குசகுவெள கடித்துவருபுகழ் தழைத்தமரகத மயின்மேலே
தகட்டுவடிவுற திருக்கையில்கொடு தனித்தென்விழி யெதிரொளிர்
[வாயே

குருக்களெனவர் செவிக்குளொருமொழி கொடுத்தமகிழ்வுறுகனிவாயா
கொதிக்குமலைகட லதைக்கையிடைகொடு குடித்தமுனிபுகழ் பெரி
[யோனே
குவட்டுவளைதொறு நடித்தபதமலர் குறிக்குமவரொடு திரிவோனே
குலப்பொனகரினன் வளர்த்தபிடியொடு குறத்தியினைதரு புயவேளே

வருக்கைதருசுளை நிகர்த்தமொழிகொடு வழுத்துமலர்களை யிகழானே
மகத்தில்வருதகர் நடத்தியிமையவர் மகிழ்ச்சியுறவிடு மிளையோனே
மணத்திலுயர்தமிழ் முழக்கமலிகழை வனத்திலெனவா விடுவோனே
வருத்துமிடிமுழு தொழித்துநினைகிற வரத்தையருளிடுமுருகோனே 12

வெண்பா

முருகா கடம்பணியு மொய்ம்பா முதல்வன்
றருகாத லாவருளைத் தாதா—வொருகாலஞ்
சொன்னமொழி பொய்யாமற் றூயதிரு நெல்வேலித்
தொன்னகரிற் றேகையில்வந் து 13

கட்டளைக் கலித்துறை

வந்திக்குந்தொண்டர் மலியுநெல்வேலியில் வாழ்முருகோன்
றந்திக்கடவுட் கிளையபிரானவன் றன்னைநம்பி
யந்திக்கொப்பான திருமேனிதன்னை யனுதினமுஞ்
சிந்திக்கச்சிந்திக்க மெய்ஞ்ஞானத்தேன்வந்து தித்திக்குமே 14

கலிநிலைத்துறை

திக்காளர்களுமெச்சு நெல்வேலிநகருற்ற செவ்வேளையே
யெக்காலமுஞ்சிந்தை செய்வோர்தமைக்காணி லெமனஞ்சுவா
னிக்காளிமலமொன்று மெய்யானெனிற்போத னென்செய்யலா
மைக்காளவிடமுண்ட பெருமானுமன்றிந்த வாறுய்ந்ததே. 15

எழுசீர் விருத்தம்

உய்ந்துளார்பாவு நெல்லைபூர்ப்பரம னுருத்திரத்திரட்கெலா மொருகோ
னைந்துமாமுகத்தோன் செயுந்தவப்பயனென் றவிர்தருதமரநாயகனே
முந்துபாழ்மிடிநோய் முதிர்வுறக்கண்டாய் மொழிந்தவாறியற்றிலாய் [தமியே
னைந்துபிரிழந்தா வன்மனக்கானே நகுமுன்னாகுணர்ந்தருளே 16

இரட்டையாசிரிய விருத்தம்

அருளாசைகொண்டுன்னை நம்பியெங்கோமுனை
தாறெழுத்தோதியதனு
லானந்தகோலா கலச்செந்தமிழ்ச்சந்த
மளவற மொழிந்துமுலகப்

பொருளாசைதனைமேவி மேவியென்னெஞ்சகம்
புண்ணுறிடச் செய்வதேன்
போதுமித்தனைபாவ பட்டதினிமேலும்
பொறுக்கரி திரக்கமில்லையோ
விருளார்புனத்திலொரு திருமுனிவனுமையன்
றெயினமடவாளிடத்தி
லேதியவளித்ததினை மாவுண்டுகளிகூரு
மின்பவிளையாடலுடையாய்
தெருளாளர்பரவுதிரு செல்வேலியூரிலமர்
செல்வருதவியபாலனே
தென்பொதிகைமலையிலுறை கும்பமுனிகருதவளர்
செம்பவளமலையருகனே. 17

### ரதக்கவி.

(தத்தன தானன தந்தனா)

செம்பவளாசல மென்றுளிராதிரு திண்புயமீதயில் கொண்டவனே
தென்றலுலாவரு பைம்பொழில்சூழ்தரு தென்பொதியாசல மென்றதி
[லோர்
திங்களினீறபு னைந்தொளிர்மாமுனி சிந்தையின்மேவியி ருந்தவனே
சென்டெறுமோர்படை கொண்டுமுன்மேருவ திர்ந்திடமோதியும்
[வந்தவனே

கம்பமதாசல முன்றிலுளானது கண்களினீர்வா வென்றுயர்சூர்
கந்தரமேனியி னந்திடமோதிய கந்தவிர்சேவக மொன்றியவா
கஞ்சமதுடுறை யும்பிரமாமிசு கம்பலையாகமு னிந்தவனே
கங்கையினூடுபி றந்தவனேகதி கண்டருள்வாயென விண்டிடலா

லம்பரமாமென வந்தெதிர்சேனையு மஞ்சமகோரசெ யம்பெறலா
மந்தாரமவ ரும்புகழ்சிருட னம்புவிமீதும்வி ளங்கிடலா
மைந்தனைமாரனை வென்றவர்வாழ்வுற மங்கவரோடும கிழ்ந்திடலா
மண்டியபேர்மிடி யும்பலநோய்களு மன்றொழிவாகுச லஞ்செயலாம்

விம்பமுமேவிய மும்பலவாசகம் விண்டிடநீறுமெ றிந்திடலாம்
விண்டலமூடுப றந்திலமையாசல விந்தையுநாடிமோ றிந்திடலாம்
விண்டுவின்மார்பிலி ருந்தவளாறிய மின்கொடியாரும்வி ரும்பிடுசீர்
மிஞ்சிடும்வேணுவ னம்புகலாமுரை வென்றிகொள்சேடனு மொஞ்
[சறுமே
18

வெண்பா

ஒஞ்சா விலைமடவா ரொள்ளியவாட் கண்ணிடத்து
நஞ்சா லிறவா நலந்தந்தாள்— செஞ்சாலி
வேலிக் கழைவனசேர் விண்ணுலக மின்னூர்தர்
தாலிக் கருணைக் கா. 19

கட்டளைக் கலித்துறை

கந்தக்கடம்ப மலர்மாலைத்தோளுடைக் காவலன்வர்
தெந்தக்கனத்தின்முன் னிற்பானெனன்றெண்ணி யிடையுமென்னை
மந்தக்கவிஞரும் பொய்த்தவத்தோர்களும் வைவதென்னோ
வந்தக்கழைவனஞ் சூழ்நெல்லையூர்க்கன்ப ரானவரே. 20

கலிநிலைத்துறை

ஆனே றுயர்த்த ன்ள பாகனுசெல்வேலி யதில்வாழுயிர்
கோனேயுனைக்கண்டு கொள்ளாமலென்சிந்தை குளிருங்கொலோ
மானேர்விழிப்பெண்களோடுதோகைமயிலேறி வாராமனீ
யேனேழைமேலிந்த வன்மஞ்செய்கிறாய்சொ லிதுபாவமே. 21

எழுசீர் விருத்தம்

பாவமேவிளைக்கும் படிறனேனுன த பவளமேனியின்மனம் பதித்துச்
சேவலங்கொடியே வலிதெனப்புகழ்ந்து செழுந்தமிழ்ப்பொழியுநாள்
[வருமோ
பூவகத்திருந்தோன் றலையிலேற்ற ருந்தும் புனிதனூழல்விழிப்பொறி
[யாய்
தேவரைப்புரந்தாய் நெல்லையூர்ப்புலவர் திருவுளமறிந்தசிற்பரனே. 22

## இரட்டையாசிரிய விருத்தம்

நிற்பாவிலாசமே யளவற்றபலகோடி
தெய்வங்களாகுமென்றுஞ்
சிருணர்ந்தானந்த வெள்ளம்படிந்தெழிற்
றிருநெல்லையூரின்முருகன்
பொற்பதங்கருதித் தமிழ்க்கவிதைபொழிகின்ற
போதம்வருவித்த விதிதான்
புல்லர்மனைவாசலிற் சென்றிரந்துழலாத
புண்ணியம் விளைப்பதென்றே
சொற்பனத்தொருமொழியை முக்காலுமொழியத்
துலங்கியவருட்கொண்டலே
தொண்டருக்கடிமையென விண்டவர்பதத்துகள்
சுமந்திடச்செய்த பொருளே
பற்பலவிதத்திலுமென் முற்பவமுணர்த்தியும்
பரிசுகெடல் கண்டிருக்கும்
பழையவுறவேமலைவி னின்றருளுமன்றுயிர்
பறந்திடாதாண்டபண்பே. 23

## சந்தக்கவி

(தந்தத் தனத்ததன—தந்தான)

பண்டிக்களிற்றுமுக வன்பக்கலிற்றனது
பங்கைக்குறித்திகலு மின்றுயோ
பண்டைத்தமிழ்ப்புலவர் செஞ்சொற்கிரக்கமுறு
பண்பைக்கெடுக்குமருள் கொண்டாயோ
பத்திப்புயத்திலணி யுஞ்சத்தியைக்கொடிய
பஞ்சத்தில்விற்றுமமுதுண்டாயோ
பஞ்சைக்குணச்சமணர் வன்புத்தரொக்குமவர்
பக்கப்படுத்தமன மொத்தாயோ.
வெண்டிக்கினிற்பலரு மன்பைப்படைத்துமிடி
யின்கட்சளப்படுத்தல் கண்டேனே
யின்பச்சுவைக்குரிய சந்தத்திருப்புகழ்சொ
லெங்கட்கிகழ்ச்சிசெய்வர் விண்டாரே

யென்பைக்கடித்துமணி முங்குக்கலொப்பவா
றின்றிப்புசிப்பவரை வென்றுரே
யென்சொற்பனத்தின்மிக வற்றாற்றுரைத்தபடி
யித்தத்திக்குதவி னன்றுமே.
மண்டிக்கனைத்தடரும் வென்றிச்சிலைத்தகுவர்
மங்கக்கெடுத்தவயின் மொய்ம்போனே
வஞ்சத்தொழிற்கொடியர் தங்கட்கிடுக்கணருள்
வண்பெற்றசித்தர்தொழ நின்றோனே
வஞ்சித்திரட்படைகொள் விந்தைச்சமர்க்கயவன்
வன்பைத்தொலைத்தபார் தம்பாலா
வய்பற்றசெச்சையொடு செம்பொற்கடப்பமிசை
வண்டுக்குலத்தணிகொ ணெஞ்சோனே
யண்டிக்கருத்தருகி வந்திக்குமுத்தமரு
ளஞ்சற்கொடுக்கவரு நண்போனே
யஞ்சப்பரிப்பிரம னெண்கட்புனற்சிதற
வன்றைக்கிடித்தபுகழ் குன்றோனே
யண்டத்திருக்குமவள் வெம்பக்குறத்தியிணை
யன்புற்றணைத்திடவு மொஞ்சானே
யங்கிக்கண்முத்தர்கழை யின்கட்சனித்தருளு
யங்குற்றருட்பொழியு மெங்கோனே. 24

வெண்பா

எங்கோ னயிலணியு மீராறு தோட்பெருமான்
செங்கோல மேதினமுஞ் சிந்தித்து—வெங்கோழி
போலப் பொருந்திறலோர் போற்றுநெல்லையூரதனிற்
சாலப் பெருந் தவம் 25

கட்டளைக் கலித்துறை

தவநிலைவேண்டித் துறந்தள்ளாளுந் தனமுழைக்கு
மவநிலைகொண்டு தடுமாறினேனென்னை யாண்டருளிச்
சிவநிலைகாட்டித் திருநெல்லையூர்புகழ் சித்திநல்கிப்
பவநிலைநீக்கிமுன் னிற்பாய்மயூரப் பரிதெய்வமே 26

### கலிநிலைத்துறை

பரியாமெனக்கொண்டு தகருருமுன்னைப் பணிந்தன்புசெய்
தரியாசனத்தர்க்கு மஞ்சாதமெய்ச்சித்தி யடைகின்றிலேன்
விரியாழிசுற்றும் புவிப்பெண்முகம்போல மிளிர்செல்லையூர்ப்
பெரியார்விரும்பும் பிரானேகுறப்பேதை பிரியத்தனே. 27

### எழுசீர் விருத்தம்

அத்தனுர்மகவுங் குரவனுமாகி யளவிலாமலைதொறுமாடுஞ்
சித்தனேநின்னுற் றயியனேனெ்புனலிற் செழுங்கனலதின்முளுட்சிதறு
மத்தனைதயிழுங் கொடுத்தருள்புரிந்தா லல்லதுசெல்லையூர்க்கணியா
முத்தனென்றென்னை மூன்றுலகிடத்து முனிவருமொழிவரோமொழி
(யே 28

### இரட்டையாசிரிய விருத்தம்

மொழிவரிய சச்சிதானந்தமயமேசெல்லை
மூதூரின் முருகவேளே
முப்பத்திரண்டறம் வளர்த்தவடிவேலதனை
மொய்ம்பிற்புனைந்த முதல்வா
பொழியுமுத்தமிழுடைப் புலவருக்கரசெனப்
புவியினர்களுக்குறிக்கும்
புகழ்மருவுகுமரகுரு பரனதனையென்று
போற்றுத புல்லனேனை
விழிமலர்ப்பார்வைகொடு மெய்யருளுறச்செய்து
மிக்கபச்சிலையில் வைத்த
வெண்ணீறளித்தன்று சொன்னபடியாடல்கள்
விளைத்திட விரும்பியின்னே
யழிவில்விண்ணவர்முனிவர் சூழ்ந்துசெயசெயவென்ன
வழகியகலாபமயின்மே
வானைதருமின்கொடியும் வேடர்தருபைங்கிளியு
மருகிலுறவரவேணுமே. 29

சந்தக்கவி.

(தானதனதன தானனா)

வேணுவனநகர் வாழுமவரெனை
வீணனெனமிக வேசாதே
வீதிதனிலொயி லாகநடைபயில்
வேசையினர்மயல் சூழாதே
வீறுபாசிவ யோகமுயல்பவர்
வேடமணிவது சோராதே
வேரிமலர்கொடு மோதியுளமகிழ்
வீரமிகுமத னூடாதே

சோணுமிளமதி போலுமெயிறுள
கோரநமன்வலை வீசாதே
கோதுதவிர்மறை நாலுமுணர்விதி
கோடியுடல்களை யீயாதே
கோழிவரைதனி லாதியவைபுனை
கோலவரைநிறை நேர்தோள்சேர்
கோதையர்களொடு தோகைமயின்மிசை
கூவுமெனதெதிர் வாராயோ

வாணுமழுவிய பேடுமெலியுட
னுபயவிர்தரு மோர்தேவே
யாதிமுதலிய தாளவிதிவழி
யர்நடமிடு தாளானே
யாவியுடல்பொரு ளீயுமடியவ
ராணைமுறைபிற ழாதானே
யாருவதன்முது கேறியுல்விடு
மானையுடன்வரு சேயோனே

பூணுமநமலி நீபநிகர்பல
பூவுமணிதரு மார்போனே
பூதகணர்பலர் சூழவிகலவர்
போர்செய்களமதின் மேயோனே

பூரமெனுமொழி ஞார்தியுடையவன்
போதவினைவிய நாலோனே
பூவிலுயர்புகழ் ஈசமேவர்புரி
பூசைகொளுமயில் வேல்வேளே. 30

வெண்பா

வேளைக் குதவிசெய்யு மெய்யனென வெண்டுமென்பா
ளுனைக் கெனும்பொய் நவின்றிலையோ—பாளைக்
கமுகடர்ந்த நெல்வேலிக் கந்தா ககனத்
தமுதனைய செல்வியர்பங் கா. 31

கட்டளைக்கலித்துறை

பங்கயமாதர் களிகூருநெல்லைப் பதிபுரக்குஞ்
சங்கானெற்றி விழியுதித்த சரவணனே
கொங்கவிழ்செச்சை மலராதியிட்டுக்கை கூப்புமென்னைச்
சங்கடத்தறச் செய்தாய்தவமுந் தடைபட்டதே 32

கலிநிலைத்துறை

தடைபட்டபணியொத்த தமியேனியற்றுந் தவஞ்சித்தியா
யுடைபட்டகடல்வெள்ள நிகரின்பம்வருநாளு மொன்றுன்னதோ
முடைபட்டதலைமாலை புனையீசர்வேய்தந்த முத்தானவூர்
கடைபட்டதெனுமூடர் குடர்மாலைபுனைநின்ற கதிர்வேலனே 33

எழுசீர் விருத்தம்

வேலையேழுடுத்த பார்மகள்கணவன் வியந்துகூறிடும் புகழ்விளைத்தப்
பாலனேர்வடிவத் தான்புகழ்கதிசேர் பரிசுறக்கருதிடப்பணித்து
மாலையிற்கரும்பு போன்மனஞ்சிதையுற் றழுங்கினேனிரங்கிலாயந்தோ
காலையிற்பரிதி யனையசீர்க்குகனே கழைவனம்புரக்கசாங்கையனே 34

இரட்டையாசிரிய விருத்தம்

புரந்தரன்றுயர்களைத் தவுணர்தங்குலமெலாம்
புணரியிலழுந்த வென்றாய்
போதன்றனைப்புடைத் தத் தளையிலிட்டுப்
புவிக்குளுயிரைப் படைத்தா

யாக்கைதவிர்வுற்றும்பர் களிகூரமாயனன்
றறையுமெய்ப்புகழ் பொருத்தா
யாலடிக்கடவுளுக் குபதேசநல்கியவ
னழல்விழியினின்றும் வந்தாய்
காந்தகொண்டில்லையென் பார்தமைக்கறுவுசொற்
கவிஞர்தறியும் கடம்புங்
காவியுஞ்செச்சையுங் குரவமும் புனலியுங்
காந்தளொடணிந்த நின்று
யிரங்கிளைத்தன்றிருப் பெயரொன்றை நம்புமெனை
யெப்படிச்செய்வாய் கொலோ
யெழின்மலியுநெல்வேலி நகர்வீதிதோறுமயி
லேறிவருமுருகேசனே. 35

## சந்தக் கவி
(தனதன தனதன தனதனனு)

முருகவிழ்சுழலிய ரதிநயமதரித
மொழிகளிலுருகிடு மயல்கெடுமோ
முகர்மணநுகர்சுவை தவிர்பொருள்பெறவென
முதிர்தமிழ்விலைபகர் மிடியறுமா
முடியணிதலையினர் தமதெனுமகல்புவி
முழுதுநினிடமெனு முணர்வுறுமா
முடைமலிதசையுண வுடையருமிலைகனி
முதலியதுணமமிழ் தினம்வருமா
வொருபொருளலதிலை யெனவுணர்பெரியவ
ருறைசபையதனரு கணுகுவனு
வுனதடியவரடி யவரெதைவிழையினு
முதவிடுதிறலொடு திகழுவனு
வுரகரு மமரரு மனிதருமனையவ
குலருதொறநுதின முலவுவனு
வுயிர்வதைமுதலிய பிழைதவிர்நெறியின
ருரிமையின்முழுதிய மகிழுவனு
தருநிழலுடையவன் மனையினிலவனெரு
தமநியநிறமகள் முலைபுணர்சேய்

தடவரையருகுறு புனமதிற்றன்மிசை
தறுகியமினிதனை வழிபடும்வேள்
சலதியினிடையொரு நகரியிலவுணர்கள்
சகலருமழிவுற வெனமயிலூர்
சரவணபவசிவ குருபரனடியவர்
தமையிகழ்கொடியவர் கெடமுனிவோ
னருமறைகளுமுத லுவல்பிரணவமெ
வமர்சிறகனிருமெ வருமிலையோ
னருதியுமரசனும் வணிகனுமனையவ
ரனைவரும்வழிபடு மொருபெருமா
னருணையில்வருகவி யெனவுமெனுயிரினை
யளவறுகனவின்முன் மொழிபவன்வே
லணிதருகனழிய கழையவனமுருகனெ
ரனுவினுமுறவிடு திருவருளே 36

முற்றிற்று.

---

நூற் பயன்.

நலங்காணு நெல்லை நகர்ச்செவ்வேட் கான
வலங்கார சட்கமுப்பத் தாறம்—விலங்காத
நாவுடையார்க் கெய்து நளினத் திருவகைத்தாம்
பூவுடையார் நல்கும் புகழ்.

---

குருபாதமேகதி.

உ

முருகக்கடவுடுணை.

# திருப்புகழ்ப் பதிகம்.

காப்பு.

நெல்லைப் பதிமுருகா நீயெனக்குச் சொன்னபல
சொல்லைமிக நம்பித் துயர்ப்பட்டே—னல்ல
திருப்புகழ்ப்பாட் டொன்றனக்குச் செப்புகின்றே னீயென்
விருப்புதவி யாண்டுகொள்ளவே

(தனன தானன தானன—தனதானு)

அருள்விளைத்தமுமாரமு தனையபாடல்கள் பாடியு
மறிவுமேன்மையு நீதியு—மிகலாவா
ராழியவாள்கொடுபோர்பொரும் வயவர்சேகரனுமொழி
லரசன்வாழ்வது காணலு—முதவாதே
பொருள்விகாதமனேகமு மனவிசாரமுமூனுகர்
புலையபரோசலுமாறிய—தாலாமோ
பொருணையாறதனூடொரு மலையினியருணபுரி
புகழுமாதவனேயெனல்—பிழைதானே
விருள்துலாவியமேனியு நெடியபீலியுமாண்மையு
மிணையில்வாதுமுனார்கெட—மொழிவோனே
யிமயமாமயில்கோமள வடிவைநாடொறு நாடியு
மிருபயோதரமேல்விழு—மவர்பாலா
தெருள்வலோர்பலர்கூடிய சபையிலுமையதாமொரு
சிறுவனுமெனவேகியு—முயர்வோனே
திறமைசேர்குமாரர்கள் புடைநிலாவியசீர்திகழ்
திருநெல்வேலியின் மேவிய—பெருமானே 1

(தனனதன தானதானதத்த—தனதானு)

சபலமிக மீறலாவிளைத்த மடமகளிர் காதலேய்கொடுத்த
தனமயலி னூடுமூழ்குமற்ப—நெறியாலே
தவமழிவு றுமனீயெனக்கு ளளவறுக ணுவிலோதிவைத்த
தமிழ்மொழியெ லாமும்வீணைத்த—ளிடலாமோ

கபடநினை வாளர்பாலிரக்க விடவுமன நாணிலாயுழைத்த
கவிபலவு முறுதானெனச்சொ—லிடுவாயோ
கனகமய மானதேரசைகுற்ற மயின்முதுகி லேறிகாளழைத்த
கனமசனி னோர்வாரிருக்கை—முறைதானே
விபவதன மூலகாரணர்கொர் தனைவனென வோதுவார்தமக்கு
விருசரண மானவாரிசத்தை—நடுவோனே
விறுதிநடு வாநிதிரசிற்கு மொருபொருளி னீர்மையேயுணர்த்து
மௌனமறைகள் பேசுதாரகத்தை—யருள்வோனே
யபரிமித மானநூல்கள்கற்ற முனிவர்புல வோரெலோருமெச்சு
மருணகிரி நாதனானதத்தை—யுடையோனே
யணிமுகிலை யூதவெய்வனத்தி னுயர்திருநெல் வேலியூர்புரக்து
மனவரத ஞானநாதர்பெற்ற—பெருமாளே. 2

(தானன தத்தன—தனதானா)
காரணசற்குரு நாதனெனப்பலர்
காதலுறத்தரு—பொருளாகி
காணவுனைத்தின நாடியுவப்புறு
சான்முனையைப் பொருண்—மயலாலே
சோணமுற்றலை வாகவிடுத்திடு
தியலுணத்தினை—மருவாதே
சிதளமிக்கப வீரிலையிற்பொடி
சோவளித்திட—லொருநாளே
பூரணநிச்சய மோனநிலைப்புணர்
போதகருக்கொரு—துணையாவாய்
போதனழுத்தலை மீதிலிடித்தகல்
புவிலுயிர்த்திர—வருள்வோனே
வாரணமற்புய மீதொருதத்தையும்
வாழும்வனப்புறு—முருகோனே
வானுலகத்துயர் வேணுவனத்துள
மாதவர்பற்றிய—பெருமானே. 3

(தனதனத் தனனதனத்—தனதானா)
புயலெனக்குலவுகுழற் சிறுமியர்க்குருகிமிகப்
புணர்தவிற்றணிவுபடைத்—ததனாலே
பொருண்மயக்கொடுபிணியுற் றுளமிகக்கவலைகொளப்
புவியினர்க்கடிமையெனத்—திரியாதே

செயன்முழுக்கவுமுணாப் பிரணவப்பொருள்கருதித்
திருவருட்கடலின்முழுக்—குருமாறே
சிகியினிற்கதிரயில்பற் றியகரத்துடனிலவிச்
செழுமணிக்கழலணிபொற்—பதமீவா
யியல்வனப்பிலகுதிருப் புகழ்தொடுத்தணியுமவர்க்
கினியவற்றினையுதவச்—சலியானே
யிமையவர்க்கரசனடற் கரிவளர்த்துதவுமகட்
கிசையுமற் புயவரிசைக்—குமரேசா
கயல்விழிக்குறமகளைச் சருவுசிற்பரனெனவுட்
கருதுகட்பினர்தமைவிட்—டகலானே
கலசமுற்றருமுனிபெற் றுதவுசற்பொருளையுடைக்
கழைவனத்துறைகுமாப்—பெருமாளே. 4

(தானதத்தன தத்தன தத்தன—தனதான)

காமனுக்கிணை யொத்தொளிர் சிற்றிடை
மாதர்செப்பிய பொய்ச்சொலினிச்சைகொள்
காசறுத்துயர் விற்பனருக்கிழி—வுரையாதே.
காரணத்தை யுரைப்பினுமெட்டிணை
யேனுமுத்தம பத்தியிலுற்றுரு
காதமட்டிகள் கைப்பொருள்பெற்றிட—நினையாதே.
தாமரைக்குளி ருப்பவனைத்திரு
மாலையத்தனை யொப்பவர்பற்றிய
தாள்களைச்சிரம் வைக்கநினைத்தெழின்—மயின்மேலே
தானதத்தன தத்தன தத்தன
தாதிமித்திமி தித்தெயெனப்பல
தாளமிட்டுந டித்தென்விழிக்கெதிர்—வருவாயே
கோமளக்குயி லொத்தவனப்பொடு
வேடர்கட்டித ணிர்குடியுற்றவள்
கோலமைக்கண்வ லைக்குள்விழத்தகு—முனிவோனே
கோபுரத்தரு ணைப்பதியிற்குடி
யாயிருக்குமொ ருத்தனைநத்தார்
கூறுமற்புத மிக்கதமிழ்க்கவி—புனைதோளா
வேமழற்கிரி யொத்தவுடற்பெறு
தானவப்பய லைக்கடிதுட்கொளும்
வேழமெத்தவி ருப்பமுறத்தரு—தணைவோனே

வேடனைத்தொரு பத்தனிடத்தம
ராமெத்தர்மு னைத்துவாததரும்
வெய்வனத்தெவ ருக்குமுவப்பருள்—பெருமானே 5

தனன தனதன தனதனதனதன
தனன தனதன தனதனதனதன
தத்தத் தனத்தன தத்தத்தனத்தன--தனதான

மதுரமலிதரு மழலெனுமதிசய
மொழிகள்கொடுவிடர் தமைவிலைகொளுமவர்
முற்றத்துறந்துதவ மெத்தப்புரிந்துபெற
லரியகதியினி லருகினரினைவுற
பெரியர்மருகிட விழிவலைவிசிறிடு
நற்பொற்பிலங்குமவர் வெற்பொத்தெழுந்தமுலை
வலிமைகொடுகல வியில்வருமவரு
முறியவமர்பொரு திரலினர் பொருளினு
மிச்சைப்படும்படியி ருத்தர்சுடுகொடியமிடியாலே
மலயமலைமிசை நிலவியகுறுமுனி
யருள்கொடுதவிய தமிழுயர்வுணர்விலர்
பக்கத்துமன்புடன டுத்துச்செலுலகொடுமை
தழையமனதுட னுடலலமாசிச
மழியமதிமைய கருமையமுலைவுற
வெட்கப்பெறம்பிணியின் மட்டிக்கிடர்கமுழு
மறதியுனதருள் வலிபெறுமலர்பத
மலரிலுதிர்தரு துகளினைமுடிமிசை
வைத்துச்சிவந்தகவி செப்பித்தினம்பாவ—லறியாயோ
கதலையுறகதி ரயிலணிமருமமும்
வயிரமுதலிய படைநிரைநிரைதிகழ்
வெற்றிப்புயங்களுமு முப்பத்திகொண்டவர்க
ளறியமினிர்தரு மபயமும்வாதமும்
வதனசுருமலர் வரிசையுமுதிரொளி
பெற்றுச்சிறந்தமணி முற்றுற்றிசைந்தபல
கலனுமருமறை முடிவினினடநவில்
சரணயுகளமு மிலகிடமயின்மிசை
புற்றத்தினைத்தினமென் முற்பட்டிலங்கியருள்—புரிவாயே

கனவிலனவரும் வடிவுகொடெனதக
மலரினமிவினி நுரைசெயுமொழிகளு
மொப்பற்றசெந்நினக ரத்திற்றெளிர்நுகொள

வருளியநுமணி பொழில்வனமலிதிரு
மலையிலுதவிய கருணையுமருணையின்
மெய்க்கற்புறுங்குயிலை யொத்துற்றபெண்கொடொரு

காவுமுனிசிறு மகவுருவுறமதி
ழுரையனநுசிக ரியின்வடவருமினை
யிச்சித்திமெப்படிா டத்திக்கொளும் புகழும்---வழுவாமோ

பதுமமுதலிய மலர்வகைசொரிதரு
மதனனுடல்பொடி படவுமிழனல்விழி
நெற்றிக்கணொன்றியவ னப்புற்றசங்கரரோர்

மழுவுமிரலையு மணிதருகரமலர்
குலவுமிறையவர் திரிபுரமுடனுல
கத்திற்றிரிந்தவர்ா கைப்பிற்கெடும்படிசெய்

பரமர்மரகத் மணிநிறமயிலுறு
பவளமலைபொரு திருவுருவுடையவர்
பட்சத்துடன்றினம ணைத்துப்புகழ்நுகொள--வருபாலா

பமரநிரைமொகு மொகுவெனமலர்மிகை
கமழுமழகிய குழலுறதிரிபுரை
முப்பத்திரண்டறமு மிட்டத்துடன்றழைய

வருளுமுமையவள் பகவதிகுணவதி
மயிடமுகமுறு கொடியவன்முதுமின
டித்துச்சிவந்தசா ணச்சத்தியம்பிகைமெய்

பகருமவரொடு திரிபவள்கவிவல
ஞொருவனிடம்வளா யுறுகரமலரினள்
பட்டுப்பொதிந்தமடி யுற்றுத்தனம்பருகு கனிவாயா

விதுரன்மனையமு தினிதயில்பவன்வட
மதுரையதிபதி தனைவதைபுரிபுய
மற்கிட்டினன்கரிய சர்ப்பத்தினின்றாட

முயலுமரிமுரா கரிகயநினையுமு
னுதவுதிருவருள் வாதன்வலிரணிய
னைச்செற்றவன்றனதி ரத்தத்தையுண்மெகிழ்

விறல்கொ ணெடியவ னலைகடலிடைவள
ரொருவனிருபது முடிகளுமறவிடும்
விற்கைத்தாத்தான்முன் மெச்சிச்சொலும்பெருமை
[யுடையோனே
விகடமதகளி றுருவெருசரவண
பவசண்முககுரு பரசுகசிசொர்
சுற்றத்துடனகடலி டத்திற்றொலைத்தமர
ரதிபணமணிமணி முடிதலைமிசைகொடு
சசியினுடுபோல சுகர்வலம்வரவிடு
மற்பெற்றகர்தவென் னட்புற்றிறைஞ்சமவர்
மிகவும்வதிதரு பலதெருவளமலி
சகரமொடுதிகழ் கழைவனமதனிடை
திற்கைக்கிசைத்தெனையி ரட்சித்திடும்பழையபெருமானே
6

(தய்யனதனதனந் தானத்தனந்த—தனதான)

பையராவலையவெங் கோபத்துமூர்த்தி—மருளாதே
பௌவமாமுரசினன் போர்முற்றநொந்து—மடியாதே
பொய்யர்வாசலினினிதம் போய்வெட்கிநின்று—தவியாதே
புள்ளிமாமயிலிலுன் கோலத்தொடின்று—வருவாயே
மெய்யர்நாடியபெருஞ் சீலத்தான்றன்—வரபாலா
வெள்ளைவாரணமுறுந் தோளிற்பிறங்கு—கிளியோனே
செய்யவாவியகடம் பாரப்புயங்கொள்—நகவேளே
செல்லைமாநகரிலென் பாடற்புனைந்த—பெருமானே. 7

(தனன தான தானதந்த—தனதான)

மிடியினுலெனோசோர்ந்து னடிகண்மீதிலாசையின்றி
வெருளுறுதனீகையொன்று— திகழாதோ
விகடமோடுவாதுவிண்டு திரியுமூடர்பாலிணங்கி
மெலிவுறுதவீறுகொண்டு—மகிழேனே
கொடியகாமநோய்படர்ந்து மகிமையாவுமாறிவம்பர்
குளறுமாறுவாடுகின்ற—தொழியாதோ
குலவுதோகைமீதிலின்க ணிருவர்பாகமேவவந்து
குறைவுறாதஞானவிஞ்சை—யருள்வாயே
நெடியமாயனாழியக்கை பெறுமுராரியோதமிஞ்ச
விமலமானசீர்பொருந்தும்—முருகோனே

நிகளமுடுவேதனென்றி யழலனுளின்மோதிவென்று
நிறையுந்பமாலைகொண்ட புயவேளே
செடியருதவேடர்தங்கள் பாணின்மி , வாழுமங்கை
சிறியதாளின்மேல்விழுந்து—பணிவோனே
சிவபிரான்முன்வேணுவின்க ணுதயமானமேன்மைதுன்று
திருநெல்வேலிவாழுவந்த—பெருமாளே 8

(தனன தனன நானதந்த — தனதான)

உனதுபெருமைகூறுமொப்பில் பனுவலளவிலாதுரைத்து
முணர்வில்கயவர்பாலிரக்க—விடலாமோ
வொழிவில்சமர்செய்வேள்விடுத்த கணைகளு—விறாடுதைக்க
சுபரிவுரதபாதரிச்சை—மிகலாமோ
பனகமுதுகிலேறிமிக்க கடனமிடுமாரியொத்த
பசியமயிலின்மீதுவெற்றி—வடிவேல்சேர்
பவளமலைகணேர்புயத்தின் வரிசையிலகமுவிரட்டி
படுநல்வதனவார்வமுற்ற—வருவாயே
வனகவமார்கோன்வளர்த்த வனிதைமறுகவேடர்கொட்டி
லதனில்வளர்மினுள்பதத்தில்—விழுவோனே
யசராசரமெலாமளிக்கும் விமலைமருவுபாகர்நெற்றி
யழலிலுதையமானசெக்க—ரனையானே
வனசயலரின்மீதிருக்கு மொ நவனலறுமாறிடித்து
மகிழ்விஞெடுபெல்சிவசிட்டி—புரிவோனே
மதுரவசனபாரதிப்பெ ணருமையறிகுவார்பெருக்க
மருவுதிருநெல்வேலியுற்ற—பெருமாளே. 9

(தாந்தன தனத்த தத்த — தனதான)

வேந்தரைமதிந்திருக்கு மாந்தர்களிகழ்ச்சிசெப்ப
வேங்கனலெனப்பிடித்த—மிடியாலே
வீண்பயல்களைத்தொடுத்து நான்சொலுமினித்தசொற்கள்
வேம்பினுமிகக்கசக்க—வவர்தாமோர்
பாந்தளதெனச்சினத்தின் மூண்டெழவிடுத்துவிட்ட
பாங்குனதுமெய்ப்புகழ்க்கு—நலமாமோ
பாந்திடுமெனக்கொருத்தன் வேண்டியவெறுக்கையொப்பில்
பாண்டியனெனக்கொடுக்க—வருள்வாயே

நித்தமிழ்முழக்குதத்தை யாண்டலையொடுற்றவெற்றி
சேர்த்துளபுயப்பெருக்க — முடையோனே
சேண்டொடும்வரைக்குலத்தி லான்றவர்தொழுக்குநித்த
சேத்தனமெர்சுகர்க்கொர் — துணையாவாய்
காந்தண்மலர்வெட்குபொற்பு வாய்ந்தகைமறத்தியத்தி
காண்டலுமடுத்தணைக்க — மகிழ்வோனே
காய்ந்துமதனைப்பொடித்த மூங்கில்வனமுத்தர்தொட்ட
கார்த்திமதிபெற்றெடுத்த — பெருமானே 10

(தனன தான தத்தாத்த — தனதான)

மகளிர்சேனையிற்காக்க மனையவேன்கைவிற்றூற்று
மலர்செய்பாழ்மயற்கோட்டி — படாதே
மதுரமார்தமிழ்ப்பாட்டு மொழிகுவார் மைச்சிற்று
வசைசொல்வார்பொருட்கேக்க — மடையாதே
புகலிநாதனைப்போற்பன் மணிமைகுடுதர்தே ற்ற
புனிதமாதவப்பேற்றை — யிகழாதோர்
புடையின்மேவிநிற்போற்றி யுயிர்கொல்வார்கெடத்தாக்கு
பொருவில்சீருட்கூத்தை — யருள்வாயே
தகரவார்குழற்பாட்டி முலையிலூறற்பாற்கொள்
சரவணாவெனிற்கேட்கு — மிருகாதா
தவளவாரணத்தேற்ற முடையன்வாழ்வறப்போக்கு
தருவர்சேனையைத்தீய்க்கும் — வடிவேலா
சிகரமால்வரைக்கூட்ட மதனிலாடிவிற்கோட்டு
திறல்கொள்வேடனிற்றேற்று — முருகோனே
செறியும்வேய்வனத்தாற்பல் வளமைதோய்தரச்சேர்த்த
திருநெல்வேலியைக்காத்த — பெருமானே 11

தனனதான தன்னதத்த—தனதான

அழிவுறாதபுண்ணியத்தி விடைவிடாமலெண்ணம்வைக்கு
மவர்கண்மீதினின்னன்மொய்க்க—விடலாமோ
வரியவேதநின்னயத்தி லுறும்வலோர்கள்பொன்னைமெச்ச
மசடர்வாசன்முன்முகப்பி—லுறலாமோ
பழிசெயீனர்கன்மவித்தை பெருமியாதுநன்மையற்ற
படிறகோடிமண்ணிடத்தின்—மிகலாமோ

பசமைசாலுமஞ்ஞையிற்பெ ணிருவரோமெின்னணைத்த
பவளமேறுவென்னநித்தம்—வருவாயே
பொழியுமாரியன்ன நற்கை வளமையோதியுன்னுமிக்க
புலவர்பாடும்வண்ணமுற்று—மணிவோனே
பொருவிலாதபொன்னகர்க்கு ளரசன்வேழமுன்வளர்த்த
புனிதமாதுகண்ணுபொற்பின்—மணவாளா
செழியனுகிவண்மையுற்ற முருகவேடர்கன்னியிச்சை
திகழ்விஞேதசண்முகநெரர்—குருநாதா
தெருவெலாமும்வெண்ணிலத்து வளையுலாவுதண்மிருத்த
திருநெல்வேலியண்ணல்பெற்ற—பெருமாளே. 12

முற்றிற்று.

நூற்பயன்.

சீராரு நெல்லைநகர்ச் சேந்தன் றிருப்புகழ்ப்பாட்
டோராறுந் தோறு மியல்புற்ருற்—றீராத
பொல்லா மிடிநோய் புறத்தோடிப் போமதன்பி
னெல்லா நலமுமுண்டாமே.

---




